**போர் புறங் கொடுத்தார் போன்ற** - சண்டைக்கு பயந்து முதுகிட்டு ஓடினவர்களைப் போன்ற,—இங்கே சண்டைக்குப் பயந்து முதுகிட்டு ஓடுவதாவது:—பரப் பிரம்மத்தின் பிரதிநிதியான ராமனுக்குச் சொந்தமான பலம் கருணை என்ற ஆயுதம்தான். சத்தியம் தவறாத சாந்தம்தான் கருணாநிதியான பகவானுடைய அம்சமான ராமனுக்கு தைரியஸ்தானம். அந்தக் கருணா பலமான சாந்தத்தைவிட்டு அதற்கு நேர்மாறான கொலையை மேற்கொண்டதனால் ராமன் தன்னுடைய சுதர்ம தைரியத்தை இழந்தவனாகி விட்டான். அந்த தைரியம் போய்விட்டதனால் ஆயுத பலத்தின்பின் ஓடி ஒளிய வேண்டியதாகி விட்டது. அதனால் ராமன் போர் புறங் கொடுத்தவனாகத் தன்னைக் கருதுகிறான். அப்படிப் போர் புறங்கொடுத்தார் போன்ற **ஆண் தொழிலோரிற் பெற்ற வெற்றியும் அவத்தம் என்றான்** - யுத்த முறையில் கொலை செய்து அடைந்த இந்த வெற்றியும் அசத்தியம் என்றான். ஆண்தொழில் என்பது போர்த் தொழில். 'பெருங் கொலை வழியாம் போர் வழியில்' அடைகின்ற வெற்றி, கருணாமூர்த்தியான கடவுளின் அம்சம் என்ற ஆன்ம உணர்ச்சியுள்ள எனக்கு பொய் யான வெற்றியாகத்தான் புலப்படுகின்றது. எனக்கு அவத்தமல்லாத சத்தியமான வெற்றி எது என்றால் ஸாத்வீகத்தையே கடைப்பிடித்து பட்டினி கிடந்து மாண்டொழிந்து போயிருக்க வேண்டும் என்று ராமன் சொன்னான் என்பது இந்தப் பாட்டில் ஐயந் திரிபற விளங்குகின்றது. இதுதான் காந்தீயத்தின் அடிப்படை. மெய்ஞ்ஞான உணர்ச்சியும் இதுவேதான்.

இந்த 'மெய்ஞ்ஞானம்' என்றதை நாம் நம்பினாலும் நம்பாவிட்டாலும், மிகவும் புதிய முறையில் மகாத்மா காந்தியவர்கள் சொல்லுவதாக நினைக்கிற இந்த மெய்ஞ்ஞான உணர்ச்சி ஏற்கனவே நம்முடைய இலக்கியத்தில் இருப்பதைக் காணும்போது அதில் ஒரு அபூர்வமான 'இலக்கிய இன்பம்' நமக்கு உண்டாகிறதல்லவா? அது போதும்.



Printed by KABEER PRINTING WORKS, Triplicane, MS. 524
and Published by Tamil Pannai, Thyagarayanagar
P. I. C. No. MS. 384—1000—25—3—'47

